# பெண்களின் சக்தியைப் போற்றும் நவராத்திரி

## முன்னுரை:-

அம்பிகையை கொண்டாடும் காலம் நவராத்திரி. சிவனுக்கு ஒரு ராத்திரி, சிவராத்திரி. ஆனால் அம்பிகைக்கு 9 ராத்திரி நவராத்திரி. அனைத்து இயக்கியங்களும் ஆதார சக்தியாக இருப்பவள் அம்பிகையே. அதனால் தான் நம் தேசம் பெண்களை தெய்வமாக கொண்டாடுகிறது. 9 ராத்திரிகள் அம்பிகையை வழிபடக்கூடிய உன்னதமான விழா தான் நவராத்திரி திருவிழா.

## நவராத்திரியின் மூலக்காரணம்:-

அம்பாள் மகிசாசூரனை வதம் செய்தற்காக இந்த 9 நாட்கள் தவம் நோற்ற காலம் தான் இந்த நவராத்திரி. முப்பெரும் தேவியர்களான மலைமகள், அலைமகள், கலைமகள் இந்த மூன்று தேவியரும் ஒரு ரூபமாக வந்து மகிசாசூரனை வதம் செய்த திருவிழா தான் இந்த நவராத்திரி.

## நவராத்திரி வகைகள்:-

சாரதா நவராத்திரி, வசந்த நவராத்திரி என்று 2 நவராத்திரிகள் பிரதானமாகக் கொண்டாப்படுகின்றன. சித்திரை மாதம் அமாவாசைக்கு பிறகு வரும் 9 நாள்கள் கொண்டாவது வசந்த நவராத்திரி. புரட்டாசி மாதம் அமாவாசைக்கு பிறகு 9 நாட்கள் சாரதா நவராத்திரி.. சாரதா நவராத்திரி தமிழகத்தில் கோலாகலமாகக் கொண்டாப்படுகிறது.

## இயற்கை சீற்றங்களை வெல்ல:-

புரட்டாசி அமாவாசை மற்றும் சித்திரை அமாவாசை இரண்டும் யமனின் இரண்டு கோரைப் பற்கள் போன்றவை. இந்த காலத்தில் மனிதர்களுக்கும் அனைத்து உயிரினங்களுக்கும் பலவிதமான பிணிகளும் துன்பங்களும், இயற்கைச் சீற்றங்களும் ஏற்பட வாய்ப்பு உண்டு. ஆகவே தான் இந்த காலங்களில் நன்மைகளே நடைபெற வேண்டும் என்று சண்டிதேவியை ஆராதனை செய்ய வேண்டும் என்று தேவிபாகவதத்தில் வியாசர் கூறுகிறார்.

## அருள்தரும் நவராத்திரி:-

நவ என்றால் 9 என்று மட்டுமல்லாமல் புத்துணர்ச்சி, புதுமை என்ற பொருளும் உண்டு. நவராத்திரி என்பது 9 நாளும் பூஜை செய்து தேவியை வழிபட்டால் நம் மனதில் புத்துணர்ச்சி பெருகும். மனம் செம்மை ஆகும். நவகிரகங்களினால் ஏற்படக்கூடிய சகல விதமான தோஷங்களும் நீங்கும் நவராத்திரி காலங்களில் அம்பிகையை பக்தி சிரத்தையுடன் வழிபட வேண்டும்.

## விரத நியதிகள்:-

புரட்டாசி அமாவசை அமாவாசைக்கு அடுத்த நாளை (பிரதமை முதல்) நவராத்திரியின் தொடக்க நாளாகக் கொள்ள வேண்டும் என்கிறது ஸ்கந்த புராணம். நவராத்திரி வழிபாடு செய்யும் வழிமுறைகளைத் தேவி பாகவதம் நமக்கு அழகாகச் சொல்லி தருகிறது. புரட்டாசி.

அமாவாசை அடுத்த பிரதமை தொடங்கி 9 நாட்கள் நவராத்திரி அனுஷ்டிக்க வேண்டும். நவராத்திரிக்கு முதல் நாள் அதாவது அமாவாசை தினத்திலேயே பூஜைக்கு வேண்டியவற்றை சேகரிக்க வேண்டும்.

கலசம் அமைப்பு :-

அம்பிகைக்காக கலச பூஜைக்காகக் கலசம் வைத்து அதில் நீர் நிரப்பி தங்கம் ரத்தினம் ஆகியவற்றை போட்டு மாவிலைகள் மேலே வைத்து மங்கல இசை முழங்க, வேத கோஷம் ஒலிக்க, பூஜையைக் தொடங்க வேண்டும்.

நவராத்திரி பலன் :-

எவர் ஒருவர் இந்த விரதத்தை தொடர்ந்து 9 நாட்கள் கடைபிடிக்கிறார்களோ அவர்களுக்குத் தேவர்களுக்கும் கிட்டாத இன்பமும், பிணியின்மையும் வரமாககிட்டும், சத்ருக்கள் தொல்லையும் நீங்கும்.

தேவியை "யாதேவி ஸர்வபூதேஷு மாத்ருரூபேனே என்று தாயின் வடிவமாகக் போற்றுகிறோம். நம் அன்னையர்கெல்லாம் அன்னை அம்பிகையை நவராத்திரி நாட்களில் வழிபட்டு நன்மைகள் அனைத்தும் பெற்றிடுவோம். நவராத்திரி விரதத்தை போன்று எளிமையானதும் அதே நேரம் மிகுந்த பலன்களைத் தரக்கூடியதுமான வேறு விரதங்கள் இல்லை என்கின்றன புராணங்கள்....

தனம், தான்யம், நிலையான இன்பம், நீண்ட ஆயுள்

ஆரோக்கியம், சுவர்க்கம், மோட்சம் என ஒரு மனிதனுக்கு வேண்டிய அனைத்தையும் தரக்கூடிய விரதம் நவராத்திரி விரதம்.

லலிதா சகஸ்ர நாமத்தை தினந்தோறும் பாடி வந்தால் கூடுதல் பலன்கள் கொடுக்கும்.

<u>நவராத்திரி சிறப்புகள்</u>:-

நவராத்திரி நாட்களில் பெண்கள் கன்யா பூஜை செய்வதால் சகல செல்வங்களும் பெறும்... ஈசனும் அம்மையும் ஒன்று சேர்ந்து ஊஞ்சலில் ஆடுவதை 9 நாட்களும் கண்டால் நவராத்திரி ஆகின்ற தரிசனத்தை நவராத்திரி நாளில் பூஜை செய்த பலன் கிடைக்கும். நவராத்திரி நாளில் லலிதா சகஸ்ரநாமம் பாராயணம் சப்தமி திதி அன்று செய்தால் மிகச்சிறப்பு உண்டாகும்.

<u>பலவிதம்</u>:-

நவராத்திரி விழா இந்தியாவின் வெவ்வேறு பகுதியில் வெவ்வேறு மாதிரி கொண்டாடப்படுகிறது. வட இந்தியாவில் பத்து நாட்கள் தசரா பண்டிகை கொண்டாடுவார்கள். பத்தாவது நாளில் ராவணின் பொம்மை வைத்து அதற்கு மேல் அம்பு விட்டு கொண்டாடுவார்கள். ராமன் ராவண வதம் செய்ததை நினைத்து போற்றி வணங்குவர்.

<u>கொலு அமைத்தல் சிறப்பு</u>:-

வீட்டில் கொலு வைத்தால் அம்பாளை அனைத்து அம்சமாக நம் வீட்டில் எழுந்தருளி

வீட்டாள் என்பது நம்பிக்கை. நவராத்திரியின் சிறப்பு அம்சம் கொலு வைப்பது ஆகும். கொலு என்பது பல படிகளை கொண்ட மேடையில் பலவித பொம்மைகள் நேர்த்தியாக அலங்கரித்து வைப்பது ஆகும்.

மண் பொம்மை சிறப்பு:-

ஐம்பூதங்களினால் ஒன்றான மண்ணினால் செய்யபட்ட பொம்மைகள் சக்தியின் அம்சங்களாக எண்ணி நவராத்திரியில் பூஜிப்பவர்களுக்கு சகல நலமும் சௌபாக்கியங்களும் தருவேன் என்று அம்பிகையே கூறியிருக்கிறார்... பாகவதத்தில்...

கொலு அமைப்பு முறை:-

கொலு மேடை 9 படிகள் கொண்டதாக வேண்டும். மனிதன் படிப்படியாக உயர்ந்து தெய்வ நிலையை அடைய வேண்டும், என்பதற்காகவே இப்படி. கொலு அமைப்பது வழக்கம்.

1 ஆவது படி - ஓரறிவு உயிரினம் (மரம், செடி, கொடி)

2 ஆவது படி - இரண்டறிவு உயிரனம் (நத்தை, சங்கு, ஆமை)

3 வது படி - மூன்று அறிவு உயிரனம் (எறும்பு)

4 வது படி - நான்கு அறிவு உயிரனம் (நண்டு, வண்டு, பறவை)

5 வது படி - ஐந்து அறிவு உயிரனம் (ஆடு, மாடு, சிங்கம், புலி, நாய் பொம்மை)

6 வது படி - ஆறறிவு உயிரனம் (மனிதன் பொம்மை)

7 வது படி - மனிதனுக்கு அப்பாற்பட்ட மகரிஷி, முனிவர்கள்

8 வது படி - தேவர்கள், நவகிரகங்கள், பஞ்சபூத தெய்வங்கள்

9 வது படி - கடவுள் - பிரம்மா, விஷ்ணு, சிவா, முருகா, கணேஷ், அம்பாள் ....

<u>நிறைவு</u>:-

தினந்தோறும் நவராத்திரி பூஜையின் நிறைவாக பலவிதமான மங்கல பொருள்கள் (மஞ்சள், குங்குமம், வளையல் போன்றவை) ஏழைகளுக்கு தானமாக அளிக்க வேண்டும். தான தர்மங்கள் தான் நவராத்திரியின் பூஜைகளை நிறைவு செய்ய, உதவுகின்றன. கன்னி பெண்களுக்கு புதிய ஆடை பரிசாக

பரிசாக அளிக்கபட வேண்டும் என்பது நவராத்திரி விழாவின் முக்கிய அம்சமாகும்.

கொலுவின் தத்துவம் (தாத்பரியம்) :-

கொலு வைத்து முப்பெரும் தேவியரை வணங்கி வரும் போது கல்வி, செல்வம், வீரம் இம்மூன்றும் நம்மிடம் செழித்தோங்கும்.

நவராத்திரியின் எனது கருத்துக்கள் :-

1. வீட்டிற்குள் இறை சக்தி இருப்பதை பொம்மைகளை கொலுவாக வைத்திருக்கும்போது நன்கு உணரலாம். ஒவ்வொரு பொருளிலும் இறைவனின் துளி உள்ளது என உணரலாம்.
2. நேர்மறை எண்ணம், புத்துணர்ச்சி வளரும்.
3. தினமும் வீட்டை சுத்தமாக வைத்துவிட்டு இறைவன் நாமத்தை சொல்லி பாராயணம் செய்யும் போது அகத்திலும் சரி புறத்திலும் சரி நல்லதொரு சுத்தமான நல்லதொரு எண்ணம் ஏற்படுகிறது.
4. அலைமகள், கலைமகள், மலைமகள் அனைத்து சக்தியும் ஒரு உருவமாக நமக்கு தேவையான சக்தியும் கிடைத்த மனத்திருப்தி கிடைக்கிறது. அனைத்து சக்தியும் கிடைத்த மனத்திருப்தி கிடைக்கிறது.
5. குழந்தைகளுக்கு அனைவரையும் வீட்டிற்கு அழைக்க வேண்டும் என்ற எண்ணம் வளருகிறது.
6. ஏழைகளுக்கு நம்மால் முடிந்த உதவியை செய்ய வேண்டும் என்ற எண்ணம் உருவாகிறது.
7. நம் சக அன்பர்களுக்கு பரிசுகள் கொடுக்க வேண்டும் என்ற ஆசை குழந்தைகளுக்கு எழும்புகிறது.
8.

8) இறைவனுக்கு பிரசாதத்தை படைத்து, பூக்களால் ஆபரணங்களால் அலங்கரித்து சந்தோஷப்படும் மனம் நிம்மதி அடைகிறது. மனதுக்குள் கொண்டாட்டம், பரவசம், இறையருள் எழும்புகிறது.

9) மொத்தில் நவராத்திரி ஒரு குதூகல கொண்டாட்டமே!..

10) "நவராத்திரியை கொண்டாடுவோம் ஐஸ்வர்யம் பெறுவோம்....."

கவிதை வார்த்தைகள்:-

மஞ்சள் குங்கும அழைப்புகளுடன்,
பக்தி பரவச நாட்களுடன்,
நன்மை பொருந்திய நவராத்திரியை,
இன்பம் பொங்கும் நாட்களாக,
இனிதே இறையருள் பெற்று,
எண்ணற்ற மகிழ்வை அடைந்து
கோலாகலமான கொலு பொம்மைகளுடன்,
கலை கட்டும் கடைவீதிகள்,
ஜொலி ஜொலிக்கும் அலங்காரங்கள் கோயில்கள்,
அழகிய அலங்காரமுடன் அம்பாள்,
குழல் இசைக்கும் பஜன்கள்,
மழலையின் மனமுருகிய பாடல்கள்,
கண் பறிக்கும் கண்ணாடி வளையல்கள்,
அழகிய ஆடை ஆபரணங்கள்
அக்கம்பக்கத்தினரின் அன்பான பரிசுகள்
வெற்றிலை பாக்கு வரவேற்பு.....
மொத்தத்தில் நவராத்திரி அற்புத திருவிழா.....

—VISALA ELAVARASAN
விசாலா இளவரசன்

# நவராத்திரி தினங்களில் செய்ய வேண்டியவை

| நாள் | அம்பாள் பெயர் | திதி | போட வேண்டிய கோலம் | பாட வேண்டிய ராகம் | அணிவிக்க வேண்டிய மாலை | செய்ய வேண்டிய பிரசாதம் | நிறம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1) | சைலபுத்திரி | பிரதமை | அரிசி மாவு பொட்டு | தோடி | மல்லிகை | சுண்டல், வெண்பொங்கல் | மஞ்சள் |
| 2) | பிரம்மசாரிணி | த்விதியா | கோதுமை மாவு கட்டம் | கல்யாணி | முல்லை | புளியோதரை | பச்சை |
| 3) | சந்திரகாந்தா | த்ருதியா/ சதுர்த்தி | முத்து மலர் | காம்போதி, கௌளை | செண்பகம் | சர்க்கரைப் பொங்கல் | சாம்பல் |
| 4) | கூஷ்மாண்டா (kushmanda) | பஞ்சமி | அட்சதை படிக்கட்டு | பைரவி | ஜாதிமல்லி | கதம்பம் (சாம்பார் சாதம்) | ஆரஞ்சு |
| 5) | ஸ்கந்தமாதா | சஷ்டி | கடலை மாவு பறவை இனம் | பந்துவராளி | பாரிஜாதம் | தயிர்சாதம் | வெள்ளை |
| 6) | காத்யாயனி | சப்தமி | பருப்பு தேவி நாமம் | நீலாம்பரி | செம்பருத்தி | தேங்காய் சாதம் | சிவப்பு |
| 7) | காலராத்திரி | அஷ்டமி | வெள்ளை மலர் அணி கோலம் | பிலஹரி | தாழம்பூ | எலுமிச்சை சாதம் (lemon) | ஊதா |
| 8) | மகாகௌரி | நவமி | தாமரைக் கோலம் | புன்னாக வராளி | சம்பங்கி, மருதாணி பூ | பால்சாதம் | பிங்க் (pink) |
| 9) | சித்திதாத்ரி | தசமி | கற்பூரம் ஆயுதம் (வாசனை பொருட்கள் கலந்த கோலம்) | வசந்தா | தாமரை, மரிக்கொழுந்து | அக்கார அடிசல் (சர்க்கரை சாதம்) | கத்தரிப்பூ (purple) |